# தசச்லோகீ ஸ்துதி

(பத்து ஸ்லோகங்களைக் கொண்டதால் இது “தசச்லோகீ” எனப்படும்.)

**ஸாம்போ3 ந: குலதை3வதம் பசுபதே**
**ஸாம்ப3 த்வதீ3யா வயம்**
**ஸாம்ப3ம் ஸ்தௌமி ஸுராஸுரோரக3க3ணா:**
**ஸாம்பே3 ந ஸந்தாரிதா: |**
**ஸாம்பா3யாஸ்து நமோ மயா விரசிதம்**
**ஸாம்பா3த் பரம் நோ ப4ஜே**
**ஸாம்ப3ஸ்யானுசரோடஸ்ம்யஹம் மம ரதி :**
**ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ||** 1

பார்வதி அன்னையோடு கூடிய பரமசிவன் நமக்கு பரம்பரையாகக் குடும்பத்தார் வழிபட்டு வரும் தெய்வம். பசுக்களாகிய உயிர்கள் காக்கும் பதியாகிய பரமசிவனே! நாங்கள் உம்மைச் சேர்த்தவர்கள். பார்வதியோடு இணைபிரியா திருக்கும் உன்னை ஸ்தோத்திரம் செய்கிறேன். பரமசிவனாகிய உன்னால் தேவர்கள் அசுரர்கள், உரர்கள் முதலியவர்களின் கூட்டங்கள் பிறவியாகிற கடலினின்று நன்கு கரையேற்றப்பட்டார்கள். என்னால் செய்யப்பட்ட நமஸ்காரம் பரமசிவனுக்கே இருக்கட்டும்! பரமசிவனைத் தவிர மற்றொருவனை தொழமாட்டேன். நான் பரமசிவனுடைய வேலைக்காரனாக இருக்கின்றேன். (மாயைக்கு அப்பால் என்றும் ஒரே வடிவமாய்த் துலங்கும்) பரப்பிரம்ம வடிவமான தாயாகிய பார்வதியோடு கூடிய பரமசிவனிடத்திலேயே எனக்கு அன்பு இருக்கட்டும்.

**விஷ்ண் வாத்யாச்ச புரத்ரயம் ஸுரக3ணா:**
**ஜேதும் ந சக்தா: ஸ்வயம்**
**யம் சம்பும் பக3வன் வயம் து பசவ:**
**(அ) ஸ்மாகம் த்வமேவேச்வர: |**
**ஸ்வஸ்வஸ்தா2நநியோஜிதா: ஸுமனஸ:**
**ஸ்வஸ்தா2 ப3பூ4வுஸ்தத**
**தஸ்மின் மே ஹ்ருத3யம் ஸுகே2ந ரமதாம்**
**ஸாம்பே3 பரப்ர3 ஹ்மணி ||** 2

விஷ்ணு முதலிய தேவர்களின் கூட்டங்கள் கூட பட்டண வடிவம் கொண்டு உலகை அழித்து வந்த புரர்கள் என்ற மூன்று அசுரர்களை தானாக வெல்வதற்கு திறமை அற்றவர்களாக இருந்ததினால் (மங்களங்களுக்கு உறைவிடமான) பரம சிவனை அடைந்து "எல்லா செல்வங்களும் நிறைந்த இறைவனே, நாங்களோ பசுக்கள். (எங்களுடைய நன்மை தீமையை அறிவதற்குக் கூட அறிவில்லாதவர்கள்.) எங்களுக்கு நீர்தான் (அடக்கி ஆளக்கூடிய திறன் வாய்ந்த) ஈச்வரன்'. (என்று ஸ்தோத்திரம் செய்தார்களோ); பிறகு (ஒரு நொடியில் பரமேச்வரன் அசுரர்களை

வென்று விட்டதால்) அந்த தேவர்கள் அவரவர் இடங்களில் முன்போல் வைக்கப் பட்டவர்களாகி, மனக்கவலை இன்றி தன் நிலையை அடைந்தவர்களாக ஆனார்களோ; அந்த பரம்பொருள் உருவமான அம்பிகையோடு சேர்ந்த பரமசிவனிடத்தில் என்னுடைய உள்ளம் இன்பத்தோடு விளையாடிக் கொண்டிருக்கட்டும்.

**க்ஷோணீ யஸ்ய ரதோ2 ரதா2ங்க3 யுக3லம்**
**சந்த்3ரார்கபி3ம்ப3த்3வயம்**
**கோத3ண்ட: கனகாசலோ ஹரிரபூ4த்**
**பா3ணோ விதி3ஸ்ஸாரதி: ।**
**தூணீரோ ஜலதிர்3 ஹயா: ச்ருதிசயோ**
**மௌர்வீ பு4ஜங்3கா3தி4ப**
**தஸ்மின் மே ஹ்ருத3யம் ஸுகே2 ந ரமதாம்**
**ஸாம்பே3 பரப்ர3ஹ்மணி ॥** 3

எந்த பரமசிவனுக்கு, (திரிபுரர்களைக் கொல்லும் பொழுது) பூமி தேராகவும், சந்திரன் சூர்யன் இவ்விரண்டு பிம்பங்களும் இரண்டு சக்ரமாயும், தங்கமலை யாகின்ற மேரு பர்வதம் வில்லாகவும், மஹாவிஷ்ணு அம்பாகவும், பிரம்மா தேரோட்டியாகவும், கடல் அம்புறாத்தூணியாகவும், வேதக்கூட்டம் குதிரைகளாகவும், பாம்புகளுக்கு அரசனாகிய வாஸுகி நாண்கயிறாகவும் இருந்ததோ அந்த பரப்பிரம்ம ரூபமான அம்பிகையோடு சேர்த்த பரமசிவனிடத்தில் என் உள்ளம் இன்பத்தோடு விளையாடிக் கொண்டிருக்கட்டும்.

**யே நாபாதி3 தமங்க3 ஜாங்க3 ப4ஸிதம்**
**தி3வ்யாங்க3ராகை3: ஸமம்**
**யேந ஸ்வீக்ரு தமப்3ஜஸம்ப4வசிர:**
**ஸௌவர்ணபாத்ரைஸ்ஸமம் ।**
**யே நாங்கீ3க்ருதமச்யுதஸ்ய நயநம்**
**பூஜாராவிந்தை3 ஸ்ஸமம்**
**தஸ்மின் மே ஹ்ருத3யம் ஸுகே2 ந ரமதாம்**
**ஸாம்பே3 பரப்ர3ஹ்மணி ॥** 4

எந்தப் பரமசிவனால் மன்மதனுடைய உடம்பின் சாம்பல் திவ்யமான மேனி பூச்ச திரவியங்களுக்கு சமமாக செய்யப்பட்டதோ; எவரால் (தாமரையினின்று உண்டான) பிரம்மாவினுடைய தலை ஓடு தங்கத்தால் செய்த பாத்திரங்களுக்கு சமமாக எடுத்துக் கொள்ளப்பட்டதோ; எவரால் மஹாவிஷ்ணுவினுடைய கண் பூஜைக்காக கொண்டு வந்த தாமரைப் பூக்களுக்கு சமமாக ஏற்றுக் கொள்ளப் பட்டதோ அந்தப் பரப்பிரம்ம ரூபமான அம்பிகையோடு சேர்ந்த பரமசிவனிடம் உள்ளம் இன்பத்தோடு விளையாடிக் கொண்டிருக்கட்டும்.

**கோ3விந்தா3த3தி4கம் ந தை3வதமிதி**
**ப்ரோச்சார்ய ஹஸ்தாவுபௌ4**
**உத்3த்4ருத்யாத2 சிவஸ்ய ஸன்னிதி4க3 தோ**
**வ்யாஸோ முனீனாம் வர ।**
**யஸ்ய ஸ்தம்பி4 தபாணிரான திக்ருதா**
**நந்தீ3ச்வரேணாப4வத்**
**தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகே2நே ரமதாம்**
**ஸாம்பே3 பரப்ர3ஹ்மணி ॥** 5

முனிவர்களுக்குள் சிறந்த வியாஸரை எந்த பரமசிவனுடைய முன்னிலையில் இருந்துகொண்டு இரண்டு கைகளை உயரத்தூக்கி மஹா விஷ்ணுவைக் காட்டிலும் மேலான தெய்வம் இல்லை என்று சொல்லி, பிறகு சிவனிடம் பணியாதவர்களை பணியவைக்கும் நந்கிகேச்வரனால் அசைவற்று தூக்கியவாறு இருக்கும்படி செய்யப்பட்ட கையை உடையவராக இருந்தாரோ அந்த பரப்பிரம்ம ரூபமான அம்பிகையோடு சேர்ந்த பரமசிவனிடத்தில் என் உள்ளம் இன்பத்தோடு விளையாடிக் கொண்டிருக்கட்டும்.

**கதை: -** வியாஸர், பரமசிவன் வீற்றிருக்கும் ஸபையில் வந்து அவருக்கு எதிரிலேயே இரண்டு கைகளையும் தூக்கி 'கோவிந்தனுக்கு மேல் தெய்வமில்லை' என்று கூறினார். அப்பொழுது, நந்திகேச்வரன் வியாஸருடைய உயரத் தூக்கிய கையைக் கீழே தணிக்க முடியாமல் அசைவற்றிருக்கச் செய்து விட்டார். பிறகு வியாஸர் சிவபெருமானின் உயர்வை ஒப்புக் கொண்டு வழிபட்ட பின்னரே அவரது ஸ்தம்பித்த கை மறுபடி செயற்படத் தொடங்கியது

.

**ஆகாசச்சிகுராயதே த3ச3தி3சா -**
**பா4கோ3 து3கூலாயதே**
**சீதாம்சு: ப்ரஸவாயதே**
**ஸ்தி2ரதரானந்த3: ஸ்வரூபாயதே ।**
**வேதா3ந்தோ நிலயாயதே ஸுவினயோ**
**யஸ்ய ஸ்வபா4வாயதே**
**தஸ்மின் மே ஹ்ருத3யம் ஸுகே2ந ரமதாம்**
**ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥** 6

எந்த பரமசிவனுக்கு ஆகாயம் தலைமுடியாக இருக்கிறதோ, பத்து திக்குக்களும் பட்டாடையாக இருக்கிறதோ, குளுமையான கிரணங்கள் உடைய சந்திரன் தலையில் சூடிக்கொள்ளும் மலர்போல் இருக்கிறானோ, என்றும் நிலைபெற்ற ஆனந் தம் தன்னுருவமாய் இருக்கின்றதோ, உபநிஷத்து இருப்பிடமாக இருக்கிறதோ, நல்ல அடக்கம் இயற்கை குணமாக இருக்கிறதோ அந்த பரப்பிரம்ம ரூபமான அம்பிகையோடு சேர்ந்த பரமசிவனிடத்தில் என் உள்ளம் இன்பத்தோடு விளையாடிக் கொண்டிருக்கட்டும்.

**விஷ்ணுர்யஸ்ய ஸஹஸ்ர நாம நியமாத்**
**அம்போ$^{4}$ருஹாண்யர்சயன்**
**ஏகோநோபசிதேஷு நேத்ரகமலம்**
**நைஜம் பதா$^{3}$ப்$^{3}$ஜத்$^{3}$ வயே ।**
**ஸம்பூஜ்யாஸுரஸம்ஹதிம் வித$^{3}$லயந்**
**த்ரைலோக்ய பாலோப$^{4}$வத்.**
**தஸ்மின் மே ஹ்ருத$^{3}$யம் ஸுகே$^{2}$ந ரமதாம்**
**ஸாம்பே$^{3}$ பரப்3ரஹ்மணி ॥** 7

எந்தப் பரமசிவனுடைய தாமரை போன்ற இரண்டு பாதங்களில் மஹா விஷ்ணு ஆயிரம் நாமங்களின் கணக்காய் தாமரை மலர்களை பூஜை செய்து கொண்டு வருங்கால் ஒன்று குறைந்த பொழுது தன்னுடைய கண் என்னும் தாமரை மலரையே எடுத்து பூஜை செய்து, இவ்வாறு பூஜித்ததற்குப் பலனாக அசுர கூட்டத்தத அழித்து மூன்று உலகையும் காப்பாற்றுகிறவனானாரோ அந்த பரப்பிரம்ம ரூபமான அம்பிகையோடு சேர்ந்த பரமசிவனிடத்தில் என் உள்ளம் இன்பத்தோடு விளையாடிக் கொண்டிருக்கட்டும்.

**சௌரிம் சத்யகி$^{3}$ரம் வராஹவபுஷம்**
**பாதா$^{3}$ம்பு$^{3}$ ஜாத$^{3}$ர்சனே**
**சக்ரே யோ த$^{3}$யயா சமஸ்தஜக$^{3}$ தாம்**
**நாதம் சிரோதர்சனே ।**
**மித்$^{2}$யாவாசபூஜ்யமேவ ஸததம்**
**ஹம்சஸ்வரூபம் விதி$^{4}$ம்**
**தஸ்மின் மே ஹ்ருத$^{3}$யம் ஸுகே$^{2}$ ந ரமதாம்**
**ஸாம்பே$^{3}$ பரப்$^{3}$ரஹ்மணி ॥** 8

உண்மையான வார்த்தைகளை உடையவரும், பரமசிவனுடைய தாமரை போன்ற திருவடிகளைக் காண்பதற்காக (பூமிக்குள் புகுந்து பார்ப்பதற்குத் தகுந்தவாறு) பன்றியின் உடலை எடுத்துக்கொண்டவரும் ஆன மஹாவிஷ்ணுவை எந்தப் பரமசிவன் தயவினால் எல்லா உலகங்களுக்கும் நாதனாக செய்தாரோ; எவருடைய தலையைப் பார்ப்பதில் (முயன்றவரும்) (தலையைப் பார்க்காமலே, "பார்த்தேன்" என்று) பொய்யான வார்த்தையைக் கூறியவரும் (ஆகாயத்தில் அளாவிய பரமசிவன் தலையைப் பார்ப்பதற்கு அனுகூலமான) அன்னத்தின் உருவத்தை உடையவரும் ஆன பிரம்மாவை எப்பொழுதும் பூஜிக்கத் தகாதவ ராகவே செய்தாரோ அந்த பரப்பிரம்ம ரூபமான அம்பிகையோடு சேர்ந்த பரமசிவனிடத்தில் என் உள்ளம் இன்பத்தோடு விளையாடிக்கொண்டிருக்கட்டும்.

**யஸ்யாஸந் த$^{4}$ரணீஜலாக்$^{3}$ நிபவன**
**வ்யோமார்கசந்த்$^{3}$ராத$^{3}$ய:**
**விக்$^{2}$யாதாஸ்தனவோऽஷ்டதா$^{4}$ பரிணதா:**
**நான்யத்ததோ வர்த்ததே ।**

**ஓங்காரார்த[2] விவேசனீ ச்ருதிரியம்**
**சாசஷ்ட துர்யம் சிவம்**
**தஸ்மின் மே ஹ்ருத[3]யம் ஸுகே[2] ந ரமதாம்**
**ஸாம்பே[2] பரப்ர[3]ஹ்மணி ||** 9

பூமி, ஜலம், அக்னி, காற்று, ஆகாசம், சூர்யன், சந்திரன் (யஜமானன்) முதலிய எட்டு விதமாக ஏற்பட்ட, புகழ் பெற்ற சரீரங்கள் எந்தப் பரமசிவனுக்கு இருக்கின்றனவோ; (எந்த அஷ்டமூர்த்தியான) பரமசிவனைக். காட்டிலும் வேறொன்று இல்லையோ, ஓங்காரத்தின் அர்த்தத்தை விளக்கும் (மாண்டூக்ய) ச்ருதியும் (எந்த பரமசிவனை) (ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி இம் மூன்றவஸ்தைகளிலும் இருக்கும் விச்வம், தைஜஸன், ப்ராஜ்ஞன் இம்மூவரைக் காட்டிலும் மேலான ஆத்மாவான) நான்காவதாகவும் மங்கள ரூபியாகவும் சொல்லுகிறதோ அந்த பரப்பிரம்ம ரூபமான அம்பிகையொடு சேர்ந்த பரம சிவனிடத்தில் என் உள்ளம் இன்பத்தோடு விளையாடிக்கொண்டிருக்கட்டும்.

**விஷ்ணுப்[3]ரஹ்மஸுராதி[4]பப்ரப்[4]ருதய:**
**சர்வேடபி தே[3]வா யத[3]ர**
**ஸம்பூ[4] தாஜ்ஜலதே[4]ர் விஷாத் பரிப[4]வம்**
**ப்ராப்தாஸ்ததா[3] ஸத்வரம்**
**தாநார்தான் சரணாகதானிதி ஸுரான்**
**யோடரக்ஷத[3]ர் த[4]க்ஷணாத்**
**தஸ்மின் மே ஹ்ருத[3]யம் ஸுகே[2] ந ரமதாம்**
**ஸாம்பே[3] பரப்ர[3] ஹ்மணி ||** 10

எப்பொழுது விஷ்ணு, ப்ரஹ்மா, தேவேந்திரன் முதலிய எல்லா தேவர்களும் ஸமுத்திரத்திலிருந்து உண்டான (ஹாலாஹல) விஷத்திலிருந்து (அதாவது, அவ்விஷத்தை அடக்க முடியாமல்) அவமானத்தை அடைந்தார்களோ, அப்பொழுது கஷ்டமுற்ற அந்த தேவர்களை,'சரண் அடைந்தவர்கள்' என்கிற காரணத்தால் எந்த பரமசிவன் சீக்கிரமாக அரை க்ஷணத்தில் காப்பாற்றினாரோ அந்த பரப்பிரம்ம ரூபமான, அம்பிகையோடு சேர்ந்த பரமசிவனிடத்தில் என் உள்ளம் இன்பத்தோடு விளையாடிக்கொண்டிருக்கட்டும்.

